கத்தோலிக்க சபையில் பாவசங்கீர்த்தனம் தேவை என்பது, மற்ற எல்லா வேத சத்தியங்கைளையும் போலவே, திருச்சபையின் அதிகாரப்பூர்வமான போதகம் ஒன்றைத்தான் ஆதாரமாகக் கொண்டுள்ளது. தரிதெந்தின் பொதுசங்கத்தில் ஏழு அருட்சாதனங்களைக் கிறீஸ்து நிறுவியதாகவும், அவற்றில் ஒன்று பாவசங்கீர்த்தனம் என்பதாகவும் அறிதியிட்டுச் சொல்லியிருக்கிறது. “யார் யாருடைய பாவங்களை மன்னிப்பீர்களோ அதுமன்னிக்கப்படும்”. அரு.20.23 என்பது குருவிடம் சொல்லி மன்னிப்பு அடைவதைத்தான் என்றும் அதே சங்கம் அறுதியிட்டுக் கூறியுள்ளது. கத்தோலிக்க சபையின் அதிகாரப்பூர்வமான போதகத்தை ஏற்றுக் கொள்ளாதவர் பாவசங்கீர்த்தனத்தின் தேவையை ஏற்றுக் கொள்ளத் தயங்குவர் மறுப்பார்.

கத்தோலிக்க சபை இப்படிப் போதிக்க சூழ்நிலை என்ன? பழைய ஏற்பாட்டில் கடவுளது சட்டமும் அதற்கு மீறி நடந்தால்

வரும் தண்டனையும் பாவநிலையும் சொல்லப்படுகிறது. ஆனால் நித்திய வாழ்வு, தண்டனை முதலியவை பற்றிய கருத்து அங்கு இன்னும் தெளிவாக வெளியிடப்படவில்லை. பாவத்துக்கு (தீட்டுகளுக்கு எபி 9.9)ப் பரிகாரமான பலிகளும் பழைய ஏற்பாட்டில் அனுசரணையில் இருந்து வந்திருக்கின்றன. கி.மு.130-லிருந்து கிரேக்கத் தொடர்புகள் காரணமாக மறுவாழ்வு பற்றி சர்ச்சைகள் எழுந்து, அதில் பரிசேயர் அது உண்டு என்றும் சதுசேயர் அது இல்லை என்றும் வாதித்தனர். அது உண்டு; அது நித்திய வாழ்க்கை அல்லது நித்திய தண்டனையாகும் என்று கிறீஸ்து போதித்தார். பாவத்தால் வருவது வெறும் தற்காலிக இவ்வுலக தண்டனை மட்டுமல்ல. நித்திய நரக தண்டனையும்தான் என்பது புதிய ஏற்பாட்டிலிருந்து தெளிவான வேத வெளியீடு . சேசு எனப் பெயர் கொடுக்கும் போதே அவர் தமது ஜனங்களை அவர்களது பாவத்திலிருந்து மீட்பார் என்று தூதர் சொல்கிறார். சேசு விண்ணகத்தந்தை பற்றிச்

சொல்லத்துவக்கி, விண்ணகவாசஸ்தலங்கள் பற்றியும் அங்கு நாம் போகும் வழிபற்றியும் போதித்து மனிதரது பாவங்களுக்காகவும் தம் இரத்தத்தையே பலியாகச் சிந்துகிறார். இவர்கள் அறியாமல் செய்கிறார்கள். இவர்களை மன்னியும் என்கிறார். பாவிகளுக்காகவே வந்தேன் என்று மீண்டும் மீண்டும் சொல்லிப் பாவிகளை மன்னித்து அவர்களது தோழமையை நாடிய அவர். சாகும் கள்ளனுக்கு, இன்று தானே நம்மோடு பரகதியில் இருப்பாய் என்று வாக்களிக்கிறார். உயிர்த்ததும் சீடர் ஒவ்வொருவரையும் தேடிப்பிடித்து, உங்களுக்குச் சமாதானம் உண்டாவதாக என்கிறார். இது பாவமன்னிப்பின் சமாதானம் என்பதை உணர்க. இதன் இறுதி நிலையாகத்தான் அரு.20.23-ல் சொல்லப்படும் பாவமன்னிப்பு அதிகாரம் கொடுக்கப்படுகிறது. இதுவேறு, ஒருவர் ஒருவரை மன்னிப்பது, நாங்கள் மன்னிப்பது போல எங்களையும் மன்னியும் என்பது வேறு.

ஆதிச்சபையில், பாவமன்னிப்பை பற்றி போதகமும், எதுபாவம் என்ற உணர்வும் கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிவாகிறது. கூட்டு வாழ்க்கை கூட்டுவழிபாடு இரண்டையும் அடுத்த ஞானஸ்நானமும் திவ்ய நற்கருணையும்தான் முதன்முதலாக முழுக்கவனத்தை இழுக்கின்றன. வேதாகம காலத்துக்கு அடுத்த கட்டத்தில் பெரும்பாவங்களும் அவற்றுக்குரிய பொதுப்பரிகார முயற்சிகளும் திருச்சபையால் குறிப்பிடப்படுகின்றன. பாவங்களைத் தனியாகப் பிறரிடம் (கணவன் மனைவியிடம், மனைவி கணவனிடம், ஒருவர் ஒருவரிடம்) சொல்லி, மன்னிப்பு வழங்கும் துறவறத்தார் காலம் தொட்டு ஆரம்பமாகிறது. அதற்கு மேல்கட்டத்தில் பாவங்களின் நுணுநுணுக்கமான பட்டியல்களும் அவற்றைக் குருவிடம் சங்கீர்த்தனம் பண்ணும்முறைகளும் வளர்ந்து வருகின்றன. பாவசங்கீர்த்தன இரகசியம் (பிறருக்குத் துன்மாதிரிகை ஏற்படாதபடிக்கு) வலியுறுத்தப்படுகிறது. பொதுவில்

சபையாருக்கு குருவானவர் மன்னிப்பு கொடுப்பதும் தனிநபர்களுக்கு மன்னிப்பளிக்கும் முறையும் இவற்றில் ஏற்படக்கூடிய சிக்கல்களுக்கு நிவர்த்தியும் திரிதெந்தின் (1548) காலத்தில் தெளிவாகிவிட்டன. இந்நிலையில் எது வேத வெளியீடு, எது வளர்ச்சி, எது தவறு, என பரிசுத்த ஆவியின் ஏவுதல்படி தீர்மானித்து மக்களை நடத்தும் பொறுப்புக் கொண்ட கத்தோலிக்க சபை பாவசங்கீர்த்தனம் பற்றிய சகல முறைகளையும் வகுத்து அதில் மக்களைப் பயிற்றுவித்து வந்திருக்கிறது.

பாவசங்கீர்த்தனத்தில் பல ஞான நன்மைகள் கிடக்கின்றன. வேத சத்தியங்களையும் நமது கடமைகளையும் நினைத்துப்பார்த்து ஆத்தும சோதனை செய்வதற்கு இது ஒரு நல்ல சந்தர்ப்பமாக அமைகிறது. அதுவரை மனதில் இருக்கக் கூடியபாவங்கள். கலக்கங்கள் யாவற்றையும் நம்மாலான மட்டும் யோசித்துப் பார்த்து நம் நல்ல தந்தையிடம் காட்டி அவரது ஆசீரைப் பெறும்போது பழைய கணக்குத் தீருகிறது.

எந்த நொடியிலும் நாம் சாவதற்கு மோட்சம் செல்வதற்கும் தயாராகிறோம். சேசுவின் ஸ்தானத்திலிருந்து திருச்சபையின் பெயரால் இரசியமான முறையில் மீண்டும் சுட்டிக்காட்ட முடியாத முறையில், நாம் நிலைமையைக் கண்டுபிடித்து அனுதாபம் காட்டி உன்பாவங்கள் மன்னிக்கப்பட்டன. சமாதானத்துடன் செல் என்று குருவானவர் சொல்வது நமக்குத தெளிவு, நிம்மதி, புதுவாழ்வு யாவற்றையும் கொடுத்து மீண்டும் இறைவனுக்காகவும் அவரது மக்களுக்காகவும் வாழச்செய்வதை அனுபவத்தில் காணலாம். பாவசங்கீர்தனம் என்பது அன்பு, இரக்கம், பக்தி, உருக்கம், தீவிர வாழ்க்கை, ஆன்மீகத்தெளிவு, நம்பிக்கை, குழந்தை உள்ளம், முதிர்ச்சி முதலியனவற்றின் ஊற்றும் உறைவிடமாகும் என்பதைச் சுவைத்துப்பார்த்துக் காண்க. இது ஒரு ஞான முயற்சி.

நேரில் நான் கடவுளிடம் மன்னிப்பு கேட்டுக் கொள்கிறேன். கிறீஸ்துவிடம் கேட்டுக் கொள்கிறேன்: எனக்கும் மனதில்

திருப்தியாகத்தான் இருக்கிறது என்பவர் உண்டு. அவர் அனுபவத்தை இல்லை எனவில்லை. ஆனால் பாவமன்னிப்பு என்பதே விசுவாசத்தை அடுத்தது: நம் அனுபவத்துக்கு அப்பாற்பட்டது. நாம் செய்வது பாவம், இறைவனுடைய கட்டளைக்கு விரோதம், இறைவனுக்கு இதனால் துரோகம் செய்கிறோம் என்பது இறைவன் (திருச்சபை, தலைவர்கள் = ஆகமங்கள் மூலமாக) நமக்கு வெளியிட்டு நாம் அறிந்து ஏற்றுக் கொள்ளும் ஒன்றுதான். இந்த விசுவாசம் இல்லாவிட்டால் அதுபாவம் என்பவதையே நாம் சரியாய்க் கண்டுபிடித்துக் கொள்ளமாட்டோம். இதேபோல, நம் பாவத்துக்கு மன்னிப்பைப் பெற்றுக் கொள்ளும் முறையையும் கடவுள் வெளியிட்டுத்தான் நாம் அறிந்து கொள்ள வேண்டும். யார் யாருடைய பாவங்களை நீங்கள் மன்னிப்பீர்களோ அது மன்னிக்கப்படும் எனும்போது, எல்லோருடைய பாவங்களையும் என்றும் சொல்லவில்லை. தகுதியுள்ளவர்களைத்தான்

மன்னிக்க வேண்டும் என்பது உணரவேண்டிய ஒன்று. இந்ததகுதி உடையவர் யார் என்று எப்படித் தெரியும்? ஒருவன் தன் பாவத்தையும் அதைவிட்டு விடுவதற்குத் தான் எடுக்கும் முயற்சியையும் நன்மனதையும் வருத்தத்தையும் வெளிப்படுத்தினால்தானே தகுதி புலனாகும்! இதைப் பார்க்கும்போது இறைவன் (கிறீஸ்து, திருச்சபையின்) பெயரால் குருவானவர் மன்னிப்பைக் கொடுக்கிறார். பாவியின் மனந்திரும்புதலும் இறைவனது மன்னிப்பும் தெளிவாக உருப்பெறுவது பாவசங்கீர்த்தன ஆசீர்வாதத்தில் தான் என்பது மேற்சொன்ன அரு.20.23-ல் உணரப்படவேண்டிய கருத்து. இல்லாவிட்டால் தான், ஆண்டவர் "மன்னியும்" என்று சிலுவையில் சொன்னதே போதும், யாவரும் மன்னிக்கப்பட்டுவிட்டார், வேறு ஒரு முயற்சியும் தேவையில்லை என்றாகிவிடுமே! மன்னிப்பைப் போதித்து, பெற்றுத்தந்து அதை நாம் பெறும் முறையையும் படிப்படியாக அமைத்துத்தருகிறார் என

உணரவேண்டியிருக்கிறது. அதை அவரே நியமித்திருக்கும் கத்தோலிக்கச் சபையின் அதிகாரப்பூர்வமான போதகம் எடுத்துரைக்கும்போது நமக்கு உறுதியும் தெளிவும் ஏற்படுகிறது ஆக, இன்னதுதான் பாவமன்னிப்பின் வழி என்பதை நாம் ஏற்று அதன்படி செயல்படும்போது அதையடுத்த பலன் கிடைக்கிறது. பாவசங்கீர்த்தனம் இல்லாமல் மன்னிப்படைகிறேன். மனஅமைதி அடைகிறேன் என்பவர் ஆண்டவர் சொன்ன உத்தரவாதமான வழியை உணரவில்லை. இதனால் தம் சொந்த தீர்மானத்தின்படி நடந்து தம்மையே சமாதானப்படுத்திக் கொண்டாலும்கூட, ஆண்டவர் சொன்ன வழியால் ஏற்பட வேண்டிய உள நலங்கள் அவரில் ஏற்படா: அதற்குரிய மோட்சபலனும் அவருக்குக் கைகூடாது. உன்னை மன்னித்துவிட்டேன் என்று ஆண்டவர் நமக்குச் சொல்லும் இடம் பாவசங்கீர்த்தனம்தான் மற்ற முறைகளில் எந்த நிச்சயமும் அவருக்குக் கிடைக்காது. தவறான முறையைச் சரியானது என

நினைத்து அவர் தவறுகிறார். தெளிவு பெற்று திருந்த வேண்டும்.

கூர்ந்து நோக்குக மனச்சான்றுப்படி செயல்பட்டால் நிம்மதி கிடைக்கும், மனச்சான்று இறைமறைச்சான்றுபடி அமைந்தால் இறைவன் சுட்டும் பலனும் கிடைக்கும். நம் சொந்தத் தீர்மானத்தின்படி அமைந்தால் நிம்மதி கிடைத்தாலும் கூட இறைவன் சுட்டும் முழுப்பலன் (ஞானப்பலன்) கிடைக்காமல் போவதைக் கவனிக்கவும். மனச்சான்று என்பதே நாம் அறிந்து கொண்டவற்றிலிருந்து நமக்கு நாமே அமைத்துக் கொள்ளும் சட்டம் தான் என்பதைச் சிந்திக்கவும். சிலர் என்ன செய்தாலும், பாவசங்கீர்த்தனம் செய்தாலும் கூட மனநிம்மதி அடைவதில்லை. அதாவது பாவமன்னிப்பு வேறு, மனநிம்மதி வேறு என்பதைக்காட்ட இதுஒரு நல்ல எடுத்துக்காட்டு. பாவமன்னிப்பு என்பது விசுவாசத்தை அடுத்தது. ஆண்டவர் சொன்னபடி பாவசங்கீர்த்தனம் செய்தால் அது நிச்சயமாய்க்கிடைக்கும் அதன் பலனை

மேட்சத்தில் காண்போம் என விசுவாசிக்கிறோம். நம்புகிறோம். நிம்மதி என்பது சில சமயங்களில் ஆண்டவர் தரும் அருளின் அடையாளமாக நம் அனுபவத்துக்குள் பிரதிபலிக்கலாம், சில சமயங்களில் விசுவாச அடிப்படையிலும், மனச்சான்றின்படியும் நாம் பாவசங்கீர்த்தனம் செய்யும்போது நம் கலக்கத்தின் காரணம் நீங்குவதிலிருந்து ஏற்படும்: சில சமங்க்ளில் வெறும் இயற்கைச் சூழ்நிலைகளால் (நல்ல உணவால், துணைவரது சகவாசத்தால், கணவனால், நிம்மதி ஏற்படுவதும் உண்டு. இவற்றின் உள் வேறுபாடுகளைச் சூழ்நிலைகளிலிருந்து பகுத்து உணர வேண்டும். (எந்நிலையிலும் நிம்மதியில்லாமல் போவது ஒரு மனவியாதி. இதற்குக் குரு உதவுவாரானால் வேத சத்தியத்தெளிவையும் சேர்த்து ஊட்டி மனதைத்திடப்படுத்துவார் இல்லாவிட்டால் பிற மனநோய் வைத்தியர்கள் தம் நாஸ்திகக் கொள்கைகளையும் உள்ளே புகுத்தி விசுவாசத்தை அழித்துவிடவும் நேரிடும்.

இன்று வைத்தியங்களை விட்டுவிட்டுக் குருவைப் பலர் அணுகுவதும் கண்கூடு.

எதாயிருந்தாலும் ஒன்றைக்கவனிக்கவும் பாவசங்கீர்தனம் தேவை என்பது திருச்சபையின் போதகத்தால்தான் தெளிவாகும். வெறும் உணர்ச்சியாலோ, நிம்மதியாலோ சொந்த வேதவிளக்க நியாயங்களாலோ தெளிவாகும் ஒன்று அது அல்ல. திருச்சபையின் உள் உணர்வுதான் கடைசி ஆதாரம்.

குறிப்பு : போதக - முறை - மாற்றங்களில் பொறுப்பு

பாறையின் மேல் கட்டப்பட்ட திருச்சபை அழியவே அழியாது. தனது மீட்புப்போதகத்தில் ஒருபோதும் தவறாது. கத்தோலிக்கத் திருச்சபை எந்தத் தவறாவரத்தைக் கொண்டுள்ளதோ அதே தவறா வரத்தைத்தான் (அதன் போதகத்தைத் தீர்மானித்துப்படிப்பிக்கும்) பாப்பனாவரும் கொண்டிருக்கிறார் என்பது முதல் வத்திக்கான் (D1839 AD 1870) திருச்சபை

என்பது கிறீஸ்துவை முழுமையாய் ஏற்று எல்லா நிலைகளிலும் வாழும் கத்தோலிக்க விசுவாசிகளின் சமுதாயமாகும். எனவே விசுவாசிகள் உணர்த்தும் மொத்தக் கோட்பாடு தவறாது என்பது பெறப்படும். அந்தக் கோட்பாட்டையும் அனுசரணை முறைகளையும் தீர்மானிக்கும்போது அவற்றில் ஏதாவது மாற்றங்கள் செய்யும்போதும் மேற்படி விசுவாசிகளது அனுபவ உணர்வுகள் முதலாவது அரங்கேற்றப்பட வேண்டும். இதற்கேற்ப பொறுப்பாளர்கள் விசுவாசத்தையடுத்த முந்தய முடிவுகளின் அடிப்படையில் தீர்மானிக்க வேண்டும். இதை விட்டுவிட்டு, வல்லுநர் என்று சொல்லிக் கொள்ளும் வாழ்ந்துணரா வாதிகளுடைய சுயநல முடிவுகளை மக்கள் தலையில் வைத்துக் கட்டுவதும், எதிர்க்கேள்விகளுக்கு முயைான பதிலைக் கொடுக்காமல் மழுப்புவதும், தம்மால் பிழைக்கும் ஆவி கூட்டத்தின் பலத்தால் திட்டங்களை அமலாக்குவதும் திருச்சபைக்கு ஏற்காத துரோகமாகும்.

(உ.ம்) 1. பொதுபைபிள் வெளியீடு செய்கிறோம் என்பதைப்பற்றி விசுவாசிகளுக்குத் தெரிவிக்காமல் செய்ததினால் வந்த கேடுகள் ஏராளம்.

1. விசுவாசம் - நம்பிக்கையாக மாறியது
2. கன்னி - இளம் பெண்ணானது
3. சமாதானம் - அமைதியாக மாறியது
4. திருச்சபை - திருஅவையாக மாறியது
5. "நானும் தந்தையம் ஒன்றே" என்பது நானும் தந்தையும் ஒன்றாயிருக்கிறோம்" என்று மாறியது.
6. இது எங்கனம் ஆகும் நானோ கணவனை அறியேனே (லூக்.1.34) என்பது "இது எப்படி நிகழும் நான் கன்னி ஆயிற்றே" என்று மாறியது.
7. லூக்.5.22 அவர்களது எண்ணங்களை அறிந்த சேசு அவர்களிடம்... ஒன்று கேட்டார் என்பது அவர்களின் எண்ணங்களை உய்த்துணர்ந்த சேசு

அவர்களைப்பார்த்து.. என்றார் என்று மாறியது. இன்னும் இதுபோல் சொல்லிக்கொண்டே போகலாம். தேவையும் இல்லை தூக்குத்தண்டைக்குரிய நூறு குற்றங்களைச் செய்த ஒருவனுக்கு தண்டனை கிடைப்பதற்குரிய ஒரு குற்றம் நிரூபணமானாலே போதும் ஒருபானை சோற்றுக்கு ஒருசோறு பதம்.

8. சின்னக்குறிப்பிடம் (Petty Catechism) இன்று பொதுக்குறிப்பிடமாக மாற்றி இனி அதைத்தான் ஞான உபதேச வகுப்புகளில்-மறைக்கல்வி வகுப்புகளில் இளம் சிறார்களுக்குக் கற்றுத் தர வேண்டும் என்று ஆயர்கள் (பாப்பனவரின் அனுமதியின்றி வெளியிட்டிருப்பதாக அறியப்படுகிறது.) ஆணை பிறப்பித்துள்ளார்கள். இதனால் கத்தோலிக்கம் என்றால் என்ன -

அதன் போதகம் என்ன என்பது பற்றி இன்றைய இளம் தலைமுறைகளுக்கு தெரியாமலே செய்துவிட்டார்கள். இதனால் விசுவாசம் மறுதலிக்கப்படுகிறது. இந்த மறுதலிப்பு யாரால் வருகிறது. அவர்களுக்கு நிகழும் சாபம் என்ன என்பதை மத்.18.6; லூக்.17.1,2 மத்.24:15, மாற் 13:14 -ல் காண்க.

எனவே தம்மைக் கலக்காமல் பொறுப்பாளர் எடுக்கும் முடிவுகள் பற்றி விசுவாசிகள் விழிப்பாயிருக்க வேண்டும். அவர்கள் சொல்வதற்கெல்லாம் சரி என்பது திருச்சபையை அழிக்கும் முயற்சியில் சாத்தானுக்கு உதவிபுரிவதாகும் ஆமென் சேசு.